Regd No. 2975

# ஸ்ரீராமாநுஜன்-397, 398

ஆசிரியர். P. B அண்ணங்கராசாரியர், மஹாவித்வான்

# SRI RAMANUJAN.

Editor:
*Mahamahimopadhyaya:*
P. B. ANNANGARACHARYA, Kanchipuram-631503

வருடச் சந்தா ரூ. 10

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.



பேரருளாளன் பெருந்தேவித் தாயார் திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி
தாழ்வாது மில்குரவா தாம்வாழி—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

துன்மதி வருஷம் 1981



# ஸ்ரீராமாநுஜன் - 397, 398

    


ஆசிரியர்:
ஸ்ரீகாஞ்சி மஹாவித்வான், P. B. அண்ணங்கராசாரியர்



தொகுதி 34 } துன்மதி ஹு ஆவணி, புரட்டாசிமீ 1981 ஹு { பகுதி 5, 6




## பத்ராதிப விஜ்ஞாபனம்

அன்பர்காள்! இதற்குமுந்தி வெளிவந்த ஸ்ரீராமாநுஜன் முகப்பில் ※ஆனி, ஆடிமீ※ என்றுள்ளது. இப்போது நடைபெறுவது கார்த்திகை மாதம். இடையில் பத்திரிகை வெளிவருவது தாழ்த்ததனால் இங்ஙனமாயிற்று. இதைப்பற்றி ஒருபுறம் வருந்துகிரேமெனினும், மற்றொருபுறம் மகிழ்வதையும் கேளீர்; 'ஸ்ரீராமாநுஜன் கிடைக்கவில்லையே! கிடைத்து வெகுநாளாயிற்றே! பத்திரிகை நிறுத்தப்பட்டு விட்டதா என்ன?'' என்று ஸாமாந்யமாக எழுதுபவர்கள் பலர்; இப்படியெழுதுவது தவிர, சிலபல ஸஹ்ருதயர்கள் எழுதுவதாவது—

''ஸ்ரீராமாநுஜனையே தாரகபோஷக போக்யங்களாகக் கொண்டிருக்கிற எமக்கு, காலத்தில் ஸ்ரீராமாநுஜன் கிடைக்காவிட்டால் தரிக்க முடியாம லிருக்கிறது; சந்தாபாக்கி யில்லையென்று நினைக்கிறோம், தெரிவித்தால் உடனே அனுப்புகிறோம்'' என்று இப்பொருளில் வகைவகையாக.

இரண்டு காரணங்களினால் தாமதமேற்படுகிறது; பிராயத்திற் கேற்ற அசக்திகொண்டிருப்பது ஒன்று; அச்சுக்கூடங்களில் எதிர்பாராத அஸௌகரியங்கள் ஏற்படுவது மற்றொன்று. பத்ரிகையை நிறுத்து வதாக எண்ணமில்லை. ... ... ... ⁂

## எனக்கேவியப்பான இளம்பிராயச் செய்தியொன்று

திருவாய்மொழியில் மாலைப்பூசற்பதிகத்தில் (*மல்லிகைகமழில்) 'ஆருக்கென் சொல்லுகேனன்னைமீர்காள்! என்றொரு பாசுரம் தொடங்கு கிறார். ஸந்தோஷம் அதிகரித்தாலும் ஸங்கடமதிகரித்தாலும் இங்ஙனே முன்னுரையிட்டுச் சொல்லுவது இயல்பு. இப்போது நான் தெரிவிக்கத் தொடங்கியது ஸந்தோஷச் செய்தி. 18—11—81 தேதியாகிய இன்று காலை மாத்வ ஸம்ப்ரதாயக்கிழவரொருவர் என்னைத் தேடிவந்து 'நான் தெரிகிறதோ?' என்றார். 'எவ்வூர்? எங்கிருந்து வருகிறீர்கள்?' என்றேன். அதற்கு அவர், 'அதிருக்கட்டும்; என் முகத்தைப் பாருங்கள், நான் தெரி கிறதோ?' என்றார். மூக்குக் கண்ணாடியில்லாமல் எனக்கு எதுவும் தெரி யாதாகையால் உடனே கண்ணாடியை எடுத்தணிந்துகொண்டு உற்றுப் பார்த்தேன்; உண்மையில் அவரை முன்பின்பார்த்ததில்லை யாதலால் தெரியவில்லையே, தாங்களே சொல்லவேணும்' என்றேன். உடனே அவர் ''கண்ணன் தின்னும் பண்டம் என்ன?

கண்ணன் தின்னும் பண்டம் வெண்ணெய்'' (என்று சொல்லி) இது நினைவுக்கு வருகிறதா? என்றார் உடனே எனக்கு அழுகைவந்து விட்டது. ஒன்றும் பேசமுடியாமல் சற்றுப்போது திணறிக்கிடந்து தங்கள் நாமதேயம் என்ன'? என்றேன், 'ச்யாமாசார் என்று பெயர்; ராமு என்று சொல்லுவர்கள' என்றார்.

மேலே கேளுங்கள்;— என்னுடைய க்ருஹம் உள்ள வீதிக்குத் தென்னண்டை மாட வீதியென்று பெயர்; இதற்குப் பின்னாலுள்ளது



கம்மாளத் தெருவென்பது, அதில் கீழண்டைப்பகுதியில் தட்டான், தச் சன், கன்னான், கருமான் சாதியர் மலிந்திருப்பர்கள்; மேலண்டைப்பகுதி யில் ஸ்மார்த்தர், மாத்வர் இதரர்களும் இருப்பார்கள். அப்பகுதியில் ஸூரிபாராவ் என்னுமொரு மாத்வர் திண்ணைப் பள்ளிக்கூடம் வைத் திருந்தார். மாடவீதிகளிலுள்ளாரெல்லாரும் தம் தம் மக்களை அக்ஷராப் யாஸமானவுடனே அப்பள்ளியில் கொண்டுவிடுவர்கள். எழுதப்படிக்கத் தெரியும்வரையில் ஒருவருஷகாலம் அப்பள்ளியில் படிக்கவேண்டிய தாகும்; அந்த உபாத்யாயர் மாணாக்கர்களெல்லார்க்கும் ஒரு கட்டளை யிட்டிருந்தார்; (அதாவது)—பள்ளி ஆரம்பிக்கும்போது மாணாக்கர்கள் எல்லாரும் வரிசையாக நின்றுகொண்டு

கண்ணன் தின்னும் பண்டம் என்ன?
கண்ணன் தின்னும் பண்டம் வெண்ணெய்

என்று பத்துத்தடவை உரக்கச் சொல்லவேண்டியது; பள்ளிவிடும் போதும் அப்படியே சொல்லவேண்டியதென்று. என்னுடைய தாய் தந்தையர் என்னையும் அப்பள்ளியில் ஏழெட்டு மாதம் சேர்த்திருந்தார் கள் அப்போது எனது வயது நாலோ ஐந்தோ! அப்போது ஆறுமாத காலம் தினப்படி இரண்டு வேளைகளிலும் மேலே தெரிவித்தபடி "கண் ணன் தின்னும் பண்டம் சொல்லி வழக்கப்பட்டிருந்தது. கீழே தெரிவித்த ராமு என்கிற மாத்வப்பிள்ளை அக்காலத்தில் என்னுடன் படித்தவன் என்பது தவிர உயிர்த்தோழனுயுமிருந்தான். என்னுடைய தாய்தந்தை யர் ஸஹோதரிகளுக்கும் மிக்க விச்வாஸ பாத்திரனுயுமிருந்தான். எண் பத்தேழு வருஷங்களுக்கு முந்திய கதை இது அப்போது உடன் பயின்றவர்களை நினைவில் வைத்துக்கொள்ள ப்ரமேயமேயில்லை இப் போது அவனாக அருகேவந்து பேசினபோது ''இந்த இளம்பிராயச் செய்தி உமக்கு எப்படி நினைவுக்கு வந்தது?'' என்று கேட்டேன்; அவர் சொன்னதாவது—எனது சொந்தவூர் நெல்லூர் பிராந்தம்; இங்கே மாதுலக்ருஹமாகையால் இளமையில் இங்கு வந்திருந்தேன்; பிறகு ஸொந்தவூருக்குப் போய்விட்டாலும் அடிக்கடி இங்கே வருவேன் நான் ஆங்கிலம் படித்து B A தேறினேன உத்யோகமுறையில் பலவூர்களி லிருந்தேன் இவ்வூர் வரும்போதெல்லாம் உங்களை கோஷ்டிகளில் காண்பேன் அணுகிப்பேசுவதற்கு அஞ்சிப்போய்விடுவேன்—இவ்வாறு பலபலவும் பேசிப்போனார் உங்களுடைய வயது என்ன? என்று கேட்

டேன், விக்ருதிஸூ பங்குனி மாதந்தான் பிறந்தேன் என்றார். அவர் கையில் தடிகூட இல்லாமல் தாராளமாக நடந்து சென்றார். ஒருபுறம் எனக்கு அசூயையுமுண்டாயிற்று. எனது தற்கால நிலைமை பெரும் பாலும் சயனமே சரணம்.

இந்த நிலைமையில் ஒரு ஸந்தோஷம். நேற்றை ஐப்பசிமீ நடை பெற்ற மணவாளமாமுனிகள் திருநக்ஷத்ரமஹோத்ஸவத்தில் ஸன்னிதி யில் ஒரு நாள் தவறாமல் வழக்கப்படி உபந்யாஸத்தை நடத்தினேன்; நாளது மார்கழித்திங்களில் வழக்கப்படி திருப்பாவை ப்ரவசனத்திற்கு நிர்ப்பந்தமான அழைப்பு வந்திருப்பதனால் புறப்பட்டுப் போவதாயிருக் கிறேன். மார்கழி முப்பதும் எனது முகவரி கீழ்க்கண்டவாறு;

**P. B. Annangaracharya,**
C/o Vuppattoor Ramanujakootam,
183, Govindappa Naickan Street,
MADRAS - 600 001

---

# மார்க்கசீர்ஷ மஹிமை

மாஸங்களின் நாமநிர்தேசம் மூன்று வகையாக உலகில் வந் திருக்கின்றது; மேஷம் வ்ருஷபம் மிதுநம்...... இத்யாதி நிர்தேசங்கள் ஸௌரமாநப்படியே நிகழுமவை. சைத்ரம் வைசாகம் ஜ்யேஷ்டம்...இத் யாதி நிர்தேசங்கள் சாந்த்ரமானப்படியே நிகழுமவை மது, மாதவம், சுக்ரம், சுசி...இத்யாதி நிர்தேசங்கள் வேதச்சாயையில் அமைந்தவை தைத்திரீய ஸம்ஹிதையில் முதல்காண்டம் நான்காவது ப்ரச்நத்தில்— "மதுச்ச மாதவச் ச சுக்ரச்ச சுசிச்ச..." இத்யாதியையும், அதிலேயே நான்காவது காண்டத்தில் நாலாவது ப்ரச்நத்தில்—"மதுச்ச மாதவச் ச வாஸந்திகாவ்ருதூ. சுக்ரச்ச சுசிச்ச க்ரைஷ்மாவ்ருதூ..." இத்யாதி யையும் காண்க. இந்த மது மாதவாதி நாமநிர்தேசம் வேதத்தில் மட் டும் வழங்குவது; உலகவழக்கில் இல்லை. ஆனால் கவிகள் சுலோகங்களில் மதுமாதவாதி நாமங்களைச் சேர்த்துக் கவியியற்றுவதுண்டு; "நபஸ்ய மாஸி ச்ரோணாயாம் அவதீர்ணாய" இத்யாதி தேசிக ஸ்துதி காண்க.



சைத்ரம் வைசாகம் இத்யாதி சாந்த்ரமாந வ்யபதேசங்களை அடி யொற்றியே சித்திரை வைகாசி...என்னும் தமிழ் மாத வழக்கு தோன் றியது. மார்க்க சீர்ஷம் (அல்லது) மார்க்கசிரம் என்கிற ஸம்ஸ்க்ருத பதத்தின் திரிபாகவே மார்கழியென்கிற தமிழ்ப்பெயர் வழங்கலாயிற்று மிருகசீர்ஷ நக்ஷத்திரமும் பௌர்ணமாஸியும் சேரப்பெறுகிற மாதம் மார்கசீர்ஷ மெனப்படும். இச்சொல்லை மார்க்க—சீர்ஷ என்று பிரித் துத் திருப்பாவைக்கு ஏற்ற பொருளைக் கொள்வது தகும். அதாவது, மார்க்கங்களில் தலையானது மார்க்கசீர்ஷம்; மார்க்கமென்றது—உபாய மென்றபடி உபாயங்களில் தலையானது—என்றதாயிற்று. கர்ம ஜ்ஞான பக்திப்ரபத்திகளுக்கும் மேலே ஆசார்யாபிமானமென்பது தலை யான உபாயமாகும். அதுதான் மார்க்கசீர்ஷம். அதுதான் மார்கழி, திருப்பாவை தொடங்கும்போதே மார்கழியென்று தொடங்கின ஆண் டாள் தான் கடைப்பிடித்ததும், திருப்பாவையில் ஸ்வாபதேசார்த்த மரி யாதையில் காட்டினதுமான ஆசார்யாபிமானத்தை ஒருவாறு நினை வூட்டுகின்றாள்.

அலங்கார சாஸ்த்ரத்தில் கைதேர்ந்தவர்களுக்குச்
சில சுவைமிக்க விஷயங்களை உபஹரிக்கின்றோமிங்கு

காவ்ய ரஸிகர்களுக்கு அலங்கார சாஸ்த்ரம் ஜீவநாடியாகவுள் ளது. அழகு பெறுத்துவது அலங்காரமெனப்படும் சப்தாலங்கார மென்றும் அர்த்தாலங்காரமென்றும் இருவகைப்பட்டவிதில் சப்தாலங் காரத்திற்காட்டிலும் அர்த்தாலங்காரம் மேம்பட்டது. வடமொழியில் அலங்காரமென்பது தென்மொழியில் அணி யெனப்படும் சொல்லணி பொருளணி யென்கிற பாகுபாடு அதிலுமுண்டு ப்ராஸம் யமகம் முத லானவற்றால் சொற்களுக்கு அழகையுண்டாக்குவது சொல்லணி. இப் போது நாம் பொருளணியில் ஏகதேசம் ஆராய்ச்சி செய்ய இழிகின்றோம்; "இத்தம் சதமலங்காரா:" என்றபடி நூறு வகையாகவுள்ள அர்த்தாலங் காரங்களில் ஸமாஸோக்தி, அப்ரஸ்துத ப்ரசம்ஸை, ப்ரஸ்துதாங்குரம் என்கிற மூன்று அலங்காரங்களைப்பற்றி முன்னம் பேசுகிறோம்;

— ஸமாஸோக்தியலங்காரம் —

"ஸமாஸோக்தி: ப்ரிஸ்பூர்த்தி: ப்ரஸ்துதே அப்ரஸ்துதஸ்ய சேத்" என்பது ஸமாஸோக்தியலங்காரத்தின் லக்ஷணம்; கவி ப்ரக்ருதமான

வொரு செய்தியைக் குறித்துப் பேசுகையில் சொற்செறிவால் அப்ரக்ருதமான ஒரு செய்தியும் தோன்றநின்ருல் அங்கு ஸமாஸோக்தியலங்காரமாகும். ''முன்பு ஒருபுறம் மேடாயிருந்த இடமெல்லாம் இப்போது பள்ளமாயிற்று; மற்ெருருபுறம் பள்ளமாயிருந்தவிடமெல்லாம் மேடாயிற்று'' என்கிருனெருவன். இவ்விஷயம் அவனுக்கு ப்ரக்ருதம்; இதிலிருந்து அப்ரக்ருதமானவொரு விஷயம் தோன்றுவது காணலாம்; அதாவது 'தனிகனுயிருந்தவன் தரித்ரனுகிருன்; தரித்ரனுயிருந்தவன் தனிகனுகிருன்' என்று. ஆகவே இங்கே ஸமாஸோக்தியலங்கரம்

## — அப்ரஸ்துத ப்ரசம்ஸாலங்காரம் —

''அப்ரஸ்துதப்ரசம்ஸா ஸ்யாத் ஸா யத்ர ப்ரஸ்துதாச்ரயா'' என்பது இவ்வலங்காரத்தின் லக்ஷணம் ப்ரக்ருதமானவொரு செய்தியைத் தோற்றுவிப்பதற்காகவே அப்ரக்ருதமானவொரு செய்தியைக் கவி வருணிப்பது அப்ரஸ்துத ப்ரசம்ஸாலங்காரமாகும். 'பறவைகளில் மழைத் தெய்வத்தையன்றி மற்றெவரையும் எதிர்பாராத சாதகபக்ஷி தான் சிறந்தது' என்ருன் ஒரு கவி. அவனுக்கு இவ்விஷயம் விவக்ஷிதமன்று;'எம்பெருமானிடத்திலன்றி மற்றெவரிடத்திலும் பல்லைக்காட்டாத பரமைகாந்தியே சிறந்தவன்' என்பதைச் சொல்லவிரும்பி, ^x^ப்ரபந்நே சாதகந்யாய:^x^ என்ற மூதுரையை மனத்திற்கொண்டு அப்ரக்ருதமான சாதக பக்ஷிப்ரசம்ஸையைச் செய்தான் கவி. ஆகவே இங்கு அப்ரஸ்துத ப்ரசம்ஸை

## — ப்ரஸ்துதாங்குராலங்காரம் —

இனி ப்ரஸ்துதாங்குரமென்னுமலங்காரத்தைப்பற்றிக் கேண்மின்; இதைப்பற்றின விமர்சத்தை முக்கியமாகக் கொண்டே இக்கட்டுரையெழுதத் தொடங்கலாயிற்று. ப்ரஸ்துதேந ப்ரஸ்துதஸ்ய த்யோதநே ப்ரஸ்துதாங்குர:'' என்று இவ்வலங்காரத்திற்கு லக்ஷணம் கூறப்பட்டுள்ளது. கவி வருணிப்பதும் ப்ரக்ருதமான செய்தி; அதிலிருந்து தோற்றுகின்ற வொரு செய்தியும் ப்ரக்ருதமானது; இப்படிப்பட்டவிடத்தில் ப்ரஸ்துதாங்குராலங்காரம் இதற்கு சந்த்ராலோகத்தில் காட்டியுள்ள உதாரணம் யாதெனில்; ^x^கிம் ப்ருங்க! ஸத்யாம் மாலத்யாம் கேதக்யா கண்டகேத்தயா^x^ என்பது இது வண்டை நோக்கி ஒரு காமினி



சொல்லுவது 'வண்டே! நல்ல மாலதீபுஷ்பமிருக்க, முள் நிறைந்த தாழையை ஏன் விரும்புகிருய்?' என்பது இதன் பொருள். இதில் வாச்யார்த்தத்திற்குமேல் வ்யங்க்யார்த்தமொன்று கண்டறியவேணும். வாச்யார்த்தம் தெரிந்ததே வ்யங்க்யார்த்தம்—அபாயமற்ற மனைவியிருக்க அவளைவிட்டு அபாயம் மிக்க வேற்று மாதரிடத்தில் விருப்பங்கொண்ட கணவனை நோக்கிக் காதலி சொல்லுவதாம். ஆக இவ்விரண்டு பொருளும் ப்ரக்ருதமே யென்றும், 'ஒன்று ப்ரக்ருதம் மற்றென்று அப்ரக்ருதம்' என்பது கிடையாதென்றும் கொள்ளப்படுகிறது.

குவலயானந்தகாரரான அப்பயதீக்ஷிதர் இங்கு எழுதுவது என்னவென்ருல், தன் கணவனேடுகூட உத்யானவனத்திற்குச்சென்ற காதலியொருத்தி அங்கு வண்டைக் கண்டு இங்ஙனே சொன்னளாதலால் இது ப்ரக்ருதமானதே; இதிலிருந்து வ்யங்க்யமானது பரநாயிகாஸந்த ஸ்வகீயநாயக சிக்ஷணம்; அதுவும் ப்ரக்ருதமானதே என்று. உடனே அவர் தாமே ஒரு சங்கையைக் கிளப்பி ஸமாதானமு மெழுதியுள்ளார்; (அதாவது) அஃறிணையானவண்டை நோக்கிச்சொல்லுவதென்பது பொருந்தாதாகையாலே இங்கு வாச்யார்த்தம் ப்ரக்ருதமாக இருக்க முடியாதே யென்று சங்கித்து. இங்ஙனே பலவிடங்களில் காண்கிருேமென்று, மரத்தை நோக்கி ஒருவன் சொன்னதும் அதற்கு மரம் விடைகூறினதுமான ச்லோகமொன்றை யெடுத்துக்காட்டி ஸமாதானம் பண்ணியிருக்கிருர்.

சந்த்ராலோககாரர் காட்டின ''கிம் ப்ருங்க! ஸத்யாம் மாலத்யாம்'; என்கிற உதாரணத்தில் வண்டை விளித்துச் சொல்லுவதுமட்டுமே யுள்ளது. தீக்ஷிதர் காட்டியுள்ள ''கஸ் த்வம் போ: கதயாமி' என்கிற சுலோகத்தில் மரத்தை விளித்து வினவுவதும், வினவப்பட்ட மரம் விடை கூறுவதுமான அமைப்பு உள்ளதனுல் இந்த வினவிடைகள் அஸம்பாவிதமென்பது அசைக்க முடியாததாம். ஸுபாஷிதரத்ந பாண்டாகாரத்தில் அந்யாபதேசச்லோகங்களை ஆயிரக்கணக்காகக் காண்கிருேம்—மேகாந்யோக்தி:, ப்ரமராந்யோக்தி:, வ்ருக்ஷாந்யோக்தி:, ம்ருகாந்யோக்தி: என்று மகுடங்கொண்ட சுலோகங்களெல்லாம் பெரும்பாலும் அப்ரஸ்துதப்ரசம்ஸாலங்காரத்திற்கு லக்ஷ்யமாகக் கூடியவையேயாகும். ப்ரஸ்துதேந ப்ரஸ்துதஸ்ய த்யோதநே ப்ரஸ்துதாங்குர''

என்ற லக்ஷணத்திற்குச்சேர ஆலங்காரிகர் காட்டின ஸமஞ்ஜஸமான லக்ஷ்யம் ஒன்றுகூட நாம் கண்டிலோம். திருப்பாவை முழுவதும் இவ் வலங்காரத்திற்கு லக்ஷ்யமென்று உபபாதிப்பவனடியேன்.

## — முத்ராலங்காரமென்றும் ஒன்றுண்டு —

ˣஸூச்யார்த்த ஸூசநம் முத்ரா ப்ரக்ருதார்த்தபரை: பதை:ˣ என்பது அதன் லக்ஷணம். சிலபல பதங்களையிட்டு கவி ஸூசிப்பிக்க நினைத்த (வேறு) அர்த்தத்தை ஸூசிப்பித்தல் முத்ராலங்காரமென்றபடி. ஒருவரை ஸ்துதிசெய்துகொண்டு போகையில் நக்ஷத்ரத்தையோ ஸம்வத்ஸரத்தையோ வ்ருத்தத்தையோ, ஸூசிப்பிக்க விரும்பி அதற்கு அநுகுணமான பதத்தையோ பதங்களையோ ப்ரயோகிப்ப கள் கவிகள்; அங்கு முத்ராலங்காரமாகும். திருப்பாவையில் இவ்வலங்காரமும் பல விடங்களில் நன்கு தோன்ற நின்றது திருப்பாவைக்கு அடியேனெழுதி வெளியிட்டுள்ள ஐந்தாறு வியாக்கியானங்களில் இதெல்லாம் விளங்கக் காணலாம். ஆயினும் வழிகாட்டிவிடாமல் இங்கும் சுருக்கமாகத் தெரிவிக்கலாகிறது

## — நீராட்டத்தின் மகிமை —

திருப்பாவையில் முதற்பாட்டில் ˣநீராடப்போதுவீர் போதுமினோ என்றழைக்கப்படுகிறது மூன்றும்பாட்டில் ˣநாங்கள் நம்பாவைக்குச் சாற்றி நீராடினால்ˣ என்றும், நாலாம்பாட்டில் ˣநாங்களும் மார்கழி நீராட மகிழ்ந்துˣ என்றும், இருபதாம்பாட்டில் ˣஇப்போதே யெம்மை நீராட்டுˣ என்றும், இருபத்தாறும் பாட்டில் ˣமார்கழி நீராடுவான்ˣ என்றும் இங்ஙனே பல விடங்களில் நீராட்டம் ப்ரஸ்தாவிக்கப்படுகிறது ஆய்ச்சிகள் நீராடுமிடமான நீர்நிலைக்குச் சென்றார்களென்று கண்டிலோம் வ்யாக்க்யாதாக்களான பெரியவாச்சான்பிள்ளை முதலான பூருவாசாரியர்கள் ' நீராடவென்னுமித்தால் இவர்கள் நினைக்கிறது க்ருஷ்ணஸம்ச்லேஷம் தமிழரும் கலவியைச் சுனையாட லென்றார்கள். ˣஏஷ ப்ரஹ்ம ப்ரவிஷ்டோஸ்மி க்ரீஷ்மே சீதமிவ ஹ்ரதம்ˣ......என்றும் சொல்லிற்றே'' என்றருளினர். இதுவன்றியும், ஆண்டாள் தன்னை நிர்தேசிக்குமிடங்களிலெல்லாம் ˣபட்டர்பிரான் கோதைˣ என்றும்



ˣபுதுவையர்கோன் விட்டுசித்தன்கோதைˣ என்றும் தனக்கு ஆசார்ய ஸம்பந்தத்தை நிரூபகமாக்கியே நிர்தேசித்தவளாகையாலே தான் ஆசார்யாபிமானத்தில் பழுத்தவளென்பதைப் பாசுரந்தோறும் காட்டியிருப்பதுங் காண்கிறோம். நீராட என்னும் ஸ்ரீஸூக்தியாலே ˣகரசரண ஸரோஜே காந்திமந்நேத்ரமீநே ச்ரமமுஷி புஜவீசிவ்யாகுலே அகாத மார்க்கே, ஹரிஸரஸி விகாஹனம் தெரிவிக்கப்படுவதுபோலே, (திருவிருத்தத்தில்) ˣகாலை நன்ஞானத்துறை படிந்தாடிக் கண்போது செய்து என்று ஆழ்வாரருளிச்செய்தபடியே ஞானத்துறையான ஸதாசார்யத் துறையில் படிந்து குடைந்தாடுவதும் தெரிவிக்கப்படுகிறது. அதற்கும் அநுகுணமாகவேயன்றோ பதப்ரயோகங்கள் அற்புதமாக அமைந்தன.

## — ஆண்டாளுடைய நிஷ்டையின் நிரூபணம் —

ஆண்டாள் நாச்சியார்திருமொழியில் உபாயங்களில் தலையானதை இரண்டு பாசுரங்களினால் நன்கு காட்டியுள்ளாள், ˣகொல்லை யரக்கியை மூக்கரிந்திட்ட குமரனார் சொல்லும் பொய்யானால், நானும் பிறந்தமை பொய்யன்றேˣ என்பது ஒரு பாசுரம். ˣநல்லவென் தோழி! நாகணை மிசை நம்பரர், செல்வர் பெரியர் சிறுமானிடவர் நாம் செய்வதென்? வில்லிபுதுவை விட்டுசித்தர் தங்கள் தேவரை வல்லபரிசு வருவிப்பரேல் அது காண்டுமேˣ என்பது மற்றொருபாசுரம். இவ்விரண்டு பாசுரங்களினாலும் ஆண்டாள் தனக்கு ஆசாரியன்வழியாகவே பேறு என்னுமிடத்தை அறுதியிட்டிருக்கின்றாள். கொல்லையரக்கியை மூக்கரிந்திட்ட குமரனார் சக்ரவர்த்தி திருமகனார்; அவருடைய சொல்லாவது ˣநத்யஜேயம் கதஞ்சநˣ இத்யாதிகள்; அவை பொய்யானாலுங்கூட, (நானும் பிறந்தமை பொய்யன்றே) நான் பெரியாழ்வார் வயிற்றிற் பிறந்தது பொய்யன்றே, எனக்குண்டான ஆசார்யஸம்பந்தம் பழுதாய்விடுமோ? ஒருகாலுமாகாது என்றபடி. இனி, "வில்லிபுதுவைவிட்டுசித்தர் தங்கள் தேவரை வல்லபரிசு வருவிப்பரேல் அது காண்டுமே" என்ற பாசுரம் ஸ்ரீவசநபூஷணத்தின் முடிவில் ஆசார்யநிஷ்டைக்குச் சார்பாக உதாஹரிக்கப்பட்டுள்ளது. அங்கு மணவாளமாமுனிகளின் வியாக்கியானம் ஸேவிப்பது. ஆகவிப்படி ஆண்டாள் தான் கடைப்பிடித்த சரமோபாயத்தையே திருப்பாவையில் உயிர்நிலையான பொருளாக வைத்துப்

பேசுகிருள். அதற்கு ஸூசகம் மார்க்க சீர்ஷ பதபர்யாயமான மார்கழி என்னும் முதற்சொல்.

— மார்க்க-சீர்ஷ என்று பிரிப்பதன் பொருத்தம் —

வாஸுதேவ சப்தத்திற்கு தத்தித வ்ருத்தியாலே வஸுதேவாத்மஜனென்னும் பொருள் தேறியிருக்கவும் பட்டர் வாஸு, தேவ: என்கிற பதங்களுக்கு ஸமாஸமாகவுங் கொண்டு பாஷ்யமிட்டதுபோல, இங்கும், மார்க்க—சீர்ஷ என்கிற பதங்களுக்கு ஸமாஸமாகக் கொள்வதில் குறையொன்றுமில்லையென்க. வாஸுதேவ சப்தத்தை வ்யாபக மந்த்ரங்கள் மூன்றில் ஒன்ருகக் கொள்வதற்குச்சேர பட்டர்பாஷ்யம் அமைந்துள்ளது.

ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

## திருவத்யயனோத்ஸவச் சிறப்பு

வெண்பா

திருவத் யயனமெனும் சீர்மைமிகு நன்னுள்
பெருமைதனைப் பேசப் புகுவான் திருமகள்கோன்
வண்ணங்க ளெல்லாம் வகுத்துரைக்கு நாவிறன்
அண்ணங்க ராசாரியன்.

ஸ்ரீவைஷ்ணவ தேவாலயங்களுக்கு அஸாதாரணமாய் ஆச்சரியமாக அனுபவிக்கப்பட்டு வருமதான மஹோத்ஸவம் திருவத்யயனோத்ஸவமென்பது. இது பகற்பத்து. இராப்பத்து எனவும் வழங்கப்பெறும். இம்மஹோத்ஸவத்திற்கு வாய்த்த காலம் மார்கழி மாதத்து சுக்லபக்ஷ ஏகாதசிக்கு (அதாவது வைகுண்ட ஏகாதசிக்கு) முன் பத்து நாட்களும் பின் பத்து நாட்களும், விஷ்ணுவாலயங்கள்தோறும் பெரும்பாலும் நடைபெற்று வருமிந்த மஹோத்ஸவத்தை உலகமெல்லாம் கட்கூடாக அனுபவித்து வருவதால் இதன் சிறப்பைப் புதிதாக நாம் தெரிவிக்க வேண்டுவதில்லை, ஆனுலும், இம்மஹோத்ஸவம் எதற்காக ஏற்பட்டது? எப்போது ஏற்பட்டது? யார் ஏற்படுத்தியது? இத்யாதி விஷயங்களில் பலர்க்கு ஜிஜ்ஞாஸை யிருக்கு மாதலால் அதுபற்றி இங்குச் சிறிது விவரிக்க விரும்புகிறேன்.



''ஸகல மதங்களிலும் பக்தர்கள் தம் தமக்குவாய்த்த பாஷைகளில் தோத்திரங்கள் இயற்றியுள்ளார்கள்; வைணவ மதத்தில் ஆழ்வார்கள் என்கிற பக்தர்கள் பாடியுள்ளார்கள்; பக்திநூல்களெல்லாம் ஸமமானவையே'' என்று சொல்லிப்போருமவர்களின் சொலவுக்கு இடமறும்படி செய்து ஸ்ரீவைஷ்ணவப் பேராசிரியர்கள் ஆயிரமாண்டுகட்கு மேற்பட்ட முற்காலத்திலேயே ஆழ்வார்களின் திவ்யப் பிரபந்தங்களுக்குச் செய்து வைத்திருக்கும் சிறப்புகளை இதனல் உலகமுணரவேண்டுவது முக்கியம். இந்த மஹோத்ஸவம் முதன் முதலாகத் திருவரங்கம் பெரிய கோயிலென்றும் நம்பெருமாள் ஸன்னிதி யென்றும் வழங்கப்பட்டு வருகிற ஸ்ரீ ரங்கத்தில் தொடக்கமாயிற்று என்பதை விவரிக்கக் காண்மின். ஆழ்வார்களின் வரிசையில் அந்தத்திலே நிற்பவரான திருமங்கையாழ்வார் பாசுரங்கள் அருளிச் செய்துகொண்டே திவ்யதேச யாத்திரையாக எழுந்தருளுங் காலத்திலே சோழநாட்டுத் திருப்பதிகளை யெல்லாம் மங்களாசாஸனம் செய்து முடித்துத் திருவரங்கம் பெரிய கோயிலுக் கெழுந்தருளவேணுமென்றிருக்கையில் திருப்புள்ளம்பூதங்குடி ஸமீபத்தில் எழுந்தருளியிருக்கும்போது ஸ்ரீரங்கநாதன் ஆழ்வாருடைய கனவிலே காட்சிதந்து உடனே ஸ்ரீரங்கம் வந்துசேர்ந்து ப்ராகார கோபுரமண்டபாதி நிர்மாண கைங்கர்யத்தை நிறைவேற்றவேணுமென்று நியமித்தருள, அந்த நியமனத்தை சிரஸாவஹித்த ஆழ்வார் *கூந்தல்கமழுங் கூடலூரிலிருந்து புறப்பட்டுக் கனவேகமாகத்திருவரங்கப்பதியை நோக்கிச் செல்லுகையில் திருவெள்ளறை ப்ராப்தமாக அங்கு ஸ்ரீச்வேதாத்ரிநாதனை மங்களாசாஸனம் செய்துவிட்டு ஸ்ரீரங்கம் சென்று சேர்ந்தார். அரங்கன் நியமித்த கைங்கரியத்தை நிறைவேற்றிவிட்டே மேற்கொண்டு பாசுரங்கள் பாடுவதென்று ஓலைச்சுவடியைக் கட்டிவைத்திட்டு ப்ராகாரமண்டபாதி நிர்மாணத்தை நிறைவேற்றினர்; ''ரங்கபுரே மணிமண்டபவப்ரகணுந் விததே பரகால கவி:'' என்று பட்டர் முத்திரையிட்டருளினபடியாலே இது நிர்விவாதம். அப்போது கோபுரப்ராகாராதி திருப்பணிகளைக்கண்டு திருவுள்ளமுகந்தருளின ரங்கநாதன் ஆழ்வார்க்குச் சில ஸத்கார விசேஷங்களைச் செய்ய மநோரதித்திருக்கையில் 'இன்னமும் சில கைங்கரியங்கள் இங்கு ஸாவசேஷமாயிருக்கையாலே அடியேன் திவ்ய தேசயாத்திரையைப் பரிபூர்த்திசெய்துகொண்டு இவ்விடம் விடைகொள்ளுகிறேன் என்று விஜ்ஞாபித்து நியமனம் பெற்று அங்குநின்றும் புறப்பட்டு அப்பக்

குடத்தான் ஸன்னிதி வழியாக நாதன்கோவில் திருவிண்ணகர் திருநறையூர் திருச்சேறை திருவழுந்தூர் சிறுபுலியூர் திருக்கண்ணமங்கை திருக்கண்ணபுரம் திருக்கண்ணங்குடி திருநாகை ஆகிய சோழநாட்டுத் திருப்பதிகளில் சேஷித்திருந்தவற்றை மங்களாசாஸனம்பண்ணித் தலைக்கட்டிப் பாண்டிநாடு மலைநாடுகளிலும் சில ஸேவித்து திவ்வியபிரபந்தங்களையெல்லாம் தலைக்கட்டி. சரமப்பிரபந்தமான திருநெடுந்தாண்டகத்தின் இறுதிப்பகுதியில் ×பொருகயல் கண்ணீரரும்பப் புலவிதந்து புனலரங்கமூரென்று போயினரே × பொன்னலர்ந்த நறுஞ் செருந்திப்பொழிலினூடே புனலரங்கமூரென்று போயினரே× என்னும் பாசுரங்களினால் அரங்கநாதன் மீண்டும் தம்மையழைக்கிறபடியை ஸூசிப்பித்து அங்கேற விடைகொண்டு அரங்கன திருமுன்பே 'நாயந்தே! நாயந்தே! என்று ப்ரஹ்வாஞ்ஜலிபுடராய்நிற்க, பெரியபெருமாள் இவர்க்கு விலக்ஷண ஸத்கார விசேஷங்கள் செய்தருள மநோரதித்திருந்ததுகண்டு ஆழ்வார் விஜ்ஞாபித்தார்—''அடியேனுடைய சில பிரார்த்தனைகளைத் திருச்செவி சாத்தியருளித் தலைக்கட்டுவதே அடியேனுக்கு ஸத்காரமாகும்; நம்மாழ்வாரருளிச்செய்த திருவாய்மொழிக்கு வேதஸாம்யம் தந்தருளவேணும்; அடியேனைப்போன்ற பக்தர்கள் (ஆழ்வார்கள்) பாடியுள்ள பாடல்களையெல்லாம் பெரிய திருவோலக்கமாகவிருந்து திருச்செவி சாத்தியருளவேணும்; நம்மாழ்வார் அவாவற்று வீடுபெற்றது மார்கழித்திங்களில் சுக்லைகாதசியன்றாகையாலே அதற்கு முன்னே பத்துநாளும், அந்நாள் முதலாகப் பத்துநாளுமாகச் சிறிய திருவத்யயநோத்ஸவமும்கண்டருளி அடியார்கள் குழாங்களை அனந்தவமுதக்கடலிலே அமிழச்செய்தருள வேணுமென்பது அடியேனுடைய பிரார்த்தனை. இதைத்தலைக்கட்டியருள்வதே அடியேனுக்குச் செய்தருளும் ஸத்காரமாகும்''—என்று. இவ்வளவும்கேட்ட பெரியபெருமாள் 'ஆழ்வீர்! திருவாய்மொழிக்கு வேதஸாம்யமன்றோ நீர்கேட்பது; வேதத்திற்காட்டிலும் ஆதிக்யமும் நாம்தந்தோம்; வேதத்தின் அங்கோபாங்கங்கள்போலே திருவாய்மொழிக்கு அங்கோபாங்கங்களாயமைந்த மற்றுள்ளதிவ்யப்ரபந்தங்களுக்கு வேதஸாம்யம் தந்தோம். மற்றும் நீர் விரும்பினதெல்லாம் அங்ஙனமேயாகும் என்று திருவுள்ளமுவந்து பணித்தபடி. இந்தப் பிரார்த்தனையும் கட்டளையும் அப்போது எந்தவிதமாக நிறைவேறிற்றென்பது காலப்பழமையாலே தெரிந்துகொள்ள முடியாமலிருக்கின்றது.



இடையில் திவ்வியப்பிரபந்தங்களும் மலினமாய்ப் போயின; நாதமுனிகளின் காலத்திற்குப்பின் ஸகலமும் ஸுபரிஷ்க்ருதமாய் ஸுப்ரஸித்தமாயிற்று

கலியுகத்தில் நம்மாழ்வார்க்குமுன்பு திருநாடு செல்வார் யாருமில்லாமையாலே வைகுந்த நீள்வாசற்கதவு மூடப்பட்டேயிருந்து ஆழ்வார் அவாவற்று வீடுபெற்றவன்றே அது திறக்கப்பட்டதென்னுமை திஹ்யத்தை நினைப்பூட்டவே வைகுண்டைகாதசியன்று பரமபதவாசல் திறப்பதென்கிற ஸம்ப்ரதாயம் நிகழ்வதாம். நம்மாழ்வார் வைகுந்தம் புக்க ஏகாதசியென்கிற காரணம்பற்றி வைகுண்டைகாதசியென்று இந்த நன்னாள் வழங்கப்பெற்றது.

நிகமாந்த மஹாகுருவரர்தாம் பணித்த குருபரம்பராஸாரமென்னும் ரஹஸ்யத்தில் ஸ்ரீமந்நாதமுனிகளைப்பற்றி ப்ரஸ்தாவித்து வருகையில் ''இவர்க்கு யோகதசையிலே ஸாக்ஷாத்க்ருதராய் நம்மாழ்வார் ஆசார்யரானார்'' என்றருளிச் செய்திருக்கையாலே நாதமுனிகள் நம்மாழ்வார் திருவாக்காலே நாலாயிர திவ்யப்ரபந்தங்களைப் பெற்று ப்ரசாரம் செய்தருளினரென்பது ஸ்பஷ்டமாகத் தெரிகின்றது. நாதமுனிகளுக்கு பாகிநேயர்களிருவர். அவர்களது திருநாமம் கீழையகத்தாழ்வார், மேலையகத்தாழ்வார் என்பதாம். அவர்களிருவரும் குசலவர்கள் போலே ஸங்கீதகலாப்ரவீணர்களாய் தேவகான நிபுணர்களாயிருந்தபடியாலே அவர்கள் தமது மாதுலரான நாதமுனிகள்பக்கலிலிருந்து பெற்ற திவ்ய ப்ரபந்தங்களை பகவதாஜ்ஞையாலும் நாதமுனிகளின் நியமனத்தினாலும் தாளத்துடன் திருவரங்கேசன் திருமுன்பே ஸேவிக்கத் தொடங்கினர்கள். மேலே ப்ரஸ்தாவித்த குருபரம்பராஸார ரஹஸ்யத்தின் முடிவில்''காளம் வலம்புரியன்ன நற்காதலடியவர்க்குத், தாளம் வழங்கித் தமிழ்மறையின்னிசை தந்த வள்ளல், மூளும் தவநெறி மூட்டிய நாதமுனிகழலே, நாளுந் தொழு தெழுவோம் நமக்கார்நிகர் நானிலத்தே'' என்றிட்ட பாட்டினால் இந்த விஷயம் வியக்தமாக விளங்கும்.

தாளவிசையோடு செய்யத் தொடங்கிய அந்த தேவகானந்தான் 'அரையர் ஸேவை' என்று இன்றைக்கும் பேர்பெற்று வருகின்றது.

அக்காலத்தில் ஸ்ரீரங்கத்தில் மட்டுமன்றிக்கே மற்றுஞ்சில திருப்பதிகளிலும் (வில்லிபுத்தூர், ஸ்ரீஆழ்வார்திருநகரி, திருக்குறுங்குடி முதலானவற்றிலும்) அரையர்கானம் நடைபெற்று வந்தது; இது இன்றைக்குங் காண்கிறது. அரையரென்னுந் திருநாமம் பூண்ட இசைகாரர்கள் ஆளவந்தார் காலத்திலேயே யிருந்து வந்ததாக நூல்களில் நன்கு காண்கிறோம்; ×பஞ்சாசார்ய பதாச்ரிதரான எம்பெருமானாருடைய ஆசாரியர்கள் ஐவரில் ஒருவர் அரையர், அவரே மேலே ப்ரஸ்தாவித்த குருபரம்பராஸாரத்தில் 'ஆளவந்தாராழ்வார்' என்று வ்யபதேசிக்கப்பட்டவர், "எம்பெருமானார்......ஆளவந்தாராழ்வார் ஸ்ரீபாதத்திலே திருவாய்மொழியுமோதி ஸ்தோத்ராதிகளும் அருளிச்செய்யும் நல்வார்த்தைகளும் கேட்டருளினார்" என்பது அவ்விடத்தில் நிகமாந்த குருபணித்த ஸூக்தி. திருவரங்கப் பெருமாளரையர், வரந்தரும் பெருமாளரையர், பிள்ளை திருநறையூரரையர்......இத்யாதிகளான அரையர் திருநாமங்களை ஆளவந்தார் காலத்திலும் எம்பெருமானார் காலத்திலும் பரவியிருக்கக் காண்கிறோம். திருவத்யயநோத்ஸவத்தில் அரையர்கள் இப்போதுபோல் அப்போதும் அபிநயங்கள் செய்துவந்தார்களென்பதை திவ்யப்ரபந்த வியாக்கியானங்களில் ஸ்பஷ்டமாகக் காண்கிறோம். அந்த அபிநயங்களை எம்பெருமானார் எம்பார் முதலான பேராசிரியர்கள் திருவோலக்கத்திலிருந்துகொண்டு அநுபவித்ததையும் பெரியாழ்வார் திருமொழி பெருமாள் திருமொழிவியாக்கியானம் முதலானவற்றில் காண்கிறோம். கோயிலில் அரையர்களுக்கு ஏற்பட்டிருக்கும் கௌரவமும் பஹுமானவிசேஷங்களும் அப்ரமேயம். பகற்பத்திலும் இராப்பத்திலும் மூன்று நாள் அரையர்கள் திருக்கையிலே அர்ச்சகர்கள் ஸ்ரீசடகோபனைத்தந்து கோஷ்டிக்கு ப்ரஸாதிக்கும்படியான பெருமையையும், சில நாட்களிலே தீர்த்தமும் ப்ரஸாதிக்கும்படியான பெருமையையும் கட்கூடாகக் கண்டு வருகிறோம். இதெல்லாம் ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞையினாலன்றி மற்றபடி ஸாமான்ய புருஷர்களின் ஏற்பாட்டினால் நடைபெறக்கூடியதன்று.

பகற்பத்திலும் இராப்பத்திலும் மூவாயிரம் பாசுரங்களை அரையர்கள் ஸேவித்துவருவதென்றும், இருபத்தோராநாளில் திருவரங்கத்தமுதனாருடைய திருவம்சஸ்தர் பெரியபெருமாளுடைய ஆஸ்தானத் திருவோலக்கத்திலே இயற்பா ஆயிரத்தையும் ஸேவித்து வருவதென்றும் அன்று தோன்றின திவ்யாஜ்ஞை பொலிகபொலிகவென்று காப்பிடக்கூடிய நிலையிலன்றே நிகழ்ந்து வருகின்றது. திருவரங்கத்தமுதனாருடைய திருவம்சஸ்தர் ஒருவரிருவரிருந்தும் கைங்கரியத்தில் ச்ரத்தை கொள்ளாமையினாலே சில வருஷகாலமாக இயற்பா ஸேவையையும் அரையர் ஸ்வாமியே உலகம் மெச்ச நடத்தி வருகிறார்.



இந்தத் திருவத்யயன மஹோத்ஸவம் முதன் முதலாகத் திருமங்கையாழ்வாரால் திருவரங்கம் பெரிய கோயிலில் தொடங்கப்பட்டதென்றும், அப்போது நம்மாழ்வாரொருவர்மட்டுமே ஆழ்வார் திருநகரியிலிருந்து எழுந்தருளச் செய்யப்பட்டு நடந்ததென்றும், ஸ்ரீமந்நாதமுனிகள் காலத்திலும் அவ்வண்ணமாகவே நடந்துவந்ததென்றும், பிறகு ஆழ்வார்களினுடைய திவ்ய மங்களவிக்ரஹப்ரதிஷ்டை கோயிலில் ஏற்பட்டு ஆழ்வார்களெல்லாரும் எழுந்தருளியிருந்து நடந்து வந்ததென்றும், நாளடைவில் ஆசாரியர்களின் திவ்யமங்கள விக்ரஹப்ரதிஷ்டையுமாகி இந்த பத்ததி ஸகல திவ்யதேசங்களிலும் வியாபித்து ×கண்டோங் கண்டோங் கண்டோம் கண்ணுக்கினியன கண்டோம், தொண்டீரெல்லீரும் வாரீர் தொழுது தொழுதுநின்றார்த்தும் ×என்னும்படியாக நிகழ்ந்து வருகின்றதென்றும் பெரியார் பணித்தருளும் ப்ரக்ரியை.

நமக்கு ஸந்நிஹிதமான தேவப்பெருமாள் ஸன்னிதி, ஸ்ரீபார்த்தஸாரதி ஸன்னிதி; எம்பெருமானார் ஸன்னிதி முதலான திருத்தலங்களில் இந்த மஹோத்ஸவம் சிறப்புற நடந்துவரும் வைகரியை அநுபவித்து ஆனந்தித்து வருகிறோம். ... ... ✳

## ஸ்ரீ ரர்மாயணத்தில் ஒரு விண்ணப்பம்

ஸ்ரீ ராமாயணத்தில் அயோத்யாகாண்டத்தில் பெருமாள் தம்முடைய வநப்ரயாணத்தைப் பிராட்டி பக்கலில் அறிவித்தபோது, பிராட்டி தன்னையும் உடனழைத்துச் செல்லவேணுமென்று நிர்ப்பந்திக்க அதை மறுக்கின்ற பெருமாள் அருளிச் செய்தபல காரணங்களில் "காட்டில் பயங்கரங்களான ஜந்துக்கள் இருக்கும், ஆகவே நீ காட்டுக்குவரத்தகாது" என்றதுமொன்று; பிறகு பிராட்டிக்கும் வநப்ரயாணம் அறி

வார்யமாயிற்று. முன்னம்பெருமாள் அருளிச்செய்த பயங்கரம்ருகபீதி என்றுபிற்றென்பதைத் தெரிவிக்கின்ற வான்மீகி முனிவர் ஸுமந்த்ர வாசா, (அயோத்யா காண்டத்தில்)—''கஜம் வா வீக்ஷ்ய ஸிம்ஹம் வா வ்யாக்ரம் வாபி வராங்கநா, நாஹாரயதி ஸந்த்ராஸம் பாஹூ ராமஸ்ய ஸம்ச்ரிதா'' என்றார். இதன் பொருளை விவரிக்கவேணுமோ? 'யானை புலி சிங்கங்களைக் கண்டபிராட்டி பெருமாளுடைய பாஹுச் சாயையிலே சென்றபடியாலே சிறிதும் அச்சங்கொள்ளவில்லை'' என்ற வாறு. ஒரு நண்பர் நம்மைக் கடிதமூலம் ஸந்தேஹப்ரச்நம் பண்ணி யிருக்கிறார்—' பிராட்டி ஸ்ரீராமபிரானுடைய திருக்கரங்களைப்பற்றிச் சென்றதனால் யானை புலி சிங்கம் முதலிய க்ரூரஜந்துக்களுக்கு அஞ்ச வில்லை'' யென்று ×பாஹூ ராமஸ்ய ஸம்ச்ரிதாவுக்குப் பொருள் கூறு கின்றனர்; இது யுக்தந்தானா?'' என்று. இதற்குச் சொல்லுகிறோம்

பிராட்டி வனத்திற் செல்லும்போது சிலவிடங்களில் பெருமா ளுடைய திருக்கரங்களைப் பிடித்துச்சென்றிருக்கவுங்கூடும்; அதை இல்லை செய்யப்போகாது. ×பாஹூ ராமஸ்ய ஸம்ச்ரிதா× என்கிற ப்ரக்ருதஸ் தலத்தில் அங்ஙனம் பொருள் சொல்வது ஏலாது. ×கரம் க்ருஹீத்வா× பாணிம்க்ருஹீத்வா×என்றுப்போலே ச்லோகமிருந்தால் அங்ஙனே பொருள் சொல்லலாம்; ×பஞ்ச சாகச் சயஃ பாணி:× என்றும்×புஜபாஹூ ப்ரவேஷ்டோ தோ:× என்றும் பிரித்துச்சொன்ன அமரகோசத்தை ஸூதையோடு நோக்கவேணும்.

×பாஹுச்சாயாமவஷ்டப்தோ யஸ்ய லோகோ மஹாத்மநஃ× என்று ஸ்ரீராமாயணத்திலேயே பிராட்டியின் வார்த்தை. ஸமுத்ரசரண கதிப்ரகரணத்தில் ×பாஹும் புஜகபோகாபமுபதாயாரிஸூதந:× என்றார் வான்மீகிமுனிவர். ×ஆவிவாஹஸமயாத் க்ருஹேவநே சைசவே ததநு யௌவநே புநஃ ஸ்வாபஹேது ரநுபாச்ரிதோந்யயா ராமபாஹுருபதாந மேஷ தே× என்று பிராட்டியைநோக்கிப் பெருமாள் கூறியதாக உத்தர ராம சரிதத்தில் பவபூதிமஹாகவி கூறினர். ஆகவே, ×பாஹூ ராமஸ்ய ஸம்ச்ரிதா× என்பதற்கு 'ராமனுடைய திருக்கரங்களைப்பற்றிக்கொண்டு செல்லும்போது' என்று பொருள் கூறுவது ஏலாது மேலும் கையைப் பிடித்துக் கொண்டு வழிநடப்பவர்கள் ஒரு கையைப் பிடித்துக்கொள்ள முடியுமேயல்லது இரண்டு கைகளையும் பிடித்துக்கொள்ளமுடியாது.



இங்கு பாஹூ என்று த்விவசனமாக இருப்பது குறிக்கொள்ளத் தக்கது. திருமாலிருஞ்சோலையழகர்க்குச் சுந்தரத்தோளுடையானென்று தென்மொழித் திருநாமம், ஸுந்தரபாஹு:, ஸுந்தரபுஜஃ என்று வட மொழித் திருநாமம்—இத்யலம். ... ... ... ※

---

ஸ்ரீ:

## நூற்றந்தாதி யிராமாநுச மாலை

(பத்ராதிபர்)

[ப்ரபந்நகாயத்ரியென்று ப்ரஸித்தமான இராமாநுச நூற்றந் தாதியில் பாசுரந்தோறுமுள்ள பகவத் ராமாநுஜ விசேஷணங்களையிட்டு எம்பெருமானார் பெருமையை விளக்குவது)

1 மாறனடி பணிந்துய்ந்த இராமாநுசன்:— எம்பெருமானார்க்கு அதிசயாவஹமான சரித்ர வைபவங்கள் பல்லாயிரமிருந்தாலும் ஆழ்வார் திருவடிகளில் ப்ராவண்யத்தையே அவர் தமக்குச் சிறந்த வைபவமாகத் திண்ணமாக எண்ணியிருந்ததனால் அதற்குச்சேர இந்த அடைமொழி அமைந்தது இதனை அடியொற்றியே நம் மணவாளமாமுனிகளும் ஸ்ரீ மாதவாங்க்ரி ஜலஜத்வய நித்ய ஸேவா ப்ரேமாவிலாசய பராங்குச பாத பத்மம்'' என்று தொடங்கினர். நம்மாழ்வார் பிறந்த பொழுதே தொடங்கி அழுதல், பால் குடித்தல் முதலிய லோகவ்யாபார மொன்று மின்றி உலக நடைக்கு மாறாக இருந்ததனால் இவர்க்கு மாறனென்று திருநாமமாயிற்று. மற்றும் பல காரணங்களும் உள. அவருடைய திரு வடிகளை யாச்ரயித்து உஜ்ஜீவித்தவர் எம்பெருமானார். நம்மாழ்வா ருடைய திருவடிநிலையை இராமாநுசனென்றே வழங்குவது மரபு

2 குறையல் பிரானடிக்கீழ் விள்ளாத அன்பன் இராமாநுசன்:— ×மாறன் பணித்த தமிழ் மறைக்கு மங்கையர்கோன் ஆறங்கங்கூறவவ தரித்த× என்கிறபடியே நம்மாழ்வாருடைய தமிழ் வேதத்திற்கு அங்க மாக ஆறு திவ்யப்ரபந்தங்களை அருளிச்செய்த திருமங்கை யாழ்வா ருடைய திருவடிகளில் ஈடுபாடுடையவர் எம்பெருமானார். திருமங்கை

யாழ்வாருடைய திருவவதாரஸ்தலம் திருக்குறையலூர் எனப்படும், அதில் அவதரித்ததனல் அவ்வாழ்வார் குறையல்பிரான் எனப்பட்டார். அவருடைய திருவடிகளிலே என்றும் விட்டு நீங்காத பக்தியை உடையவர் உடையவர் (ஸ்வாமி). திருவாலிதிருநகரியில் எழுந்தருளியிருக்கின்ற திருமங்கை மன்னனுடைய பாதாரவிந்த பீடத்தின்கீழ் எம்பெருமானுருடைய திருக்கோலம் ஏறியருளப்பண்ணப்பட்டிருப்பது காண்க.

3 பொருவருஞ்சீர் ஆரியன் செம்மை யிராமாநுசன்:— ஒப்பற்ற திருக்குணங்களை உடையவரும் சிறந்த அநுஷ்டானம் உடையவரும் ஆச்ரிதரோடு ருஜுவாகப் பரிமாறும் தன்மையுடையவருமான எம்பெருமானுரென்கை. "அஸ்மத்குரோர் பகவதோஸ்ய தயைகஸிந்தோ: ராமாநுஜஸ்ய" என்று கூரத்தாழ்வான் அருளிச்செய்த தயைகஸிந்துத்வமே 'பொருவருஞ்சீர்' எனபது. (ஆரியன்) ×கர்த்தவ்யமாசரந் காமமகர்த்தவ்யமநாசரந், திஷ்ட்டதி ப்ரக்ருதாசாரே யஸ் ஸ ஆர்ய இதிஸ்ம்ருத:× என்கிறபடியே ஆசாரசீலர் என்கை. செம்மையாவது கரணத்ரய ஸாருப்யம்—மனோவாக்காயங்களின் வ்ருத்தி ஒருபடிப்பட்டிருப்பவரென்கை. ஆக மூன்று விசேஷணங்கள் விளங்கப்பெற்றவர்.

4 ஊழி முதல்வனையே பன்னப்பணித்த இராமாநுசன்;— காலம் முதலிய ஸகல பதார்த்தங்களுக்கும் காரணபூதனுகையாலே ஊழிமுதல்வன் என்னப்படுகை. விமுகர்களாயிருந்த ஸம்ஸாரிகளுங்கூட ஸ்ரீமந் நாராயணனையே எப்போதும்நினைக்கும்படி உபதேசாதிமுகத்தாலே செய்தருளினவர் ஸ்வாமி. பகவத் ப்ராவண்ய ஹீநர்களாயிருந்த உண்டியே உடையே உகந்தோடும் இம்மண்டலத்தவர்க்கெல்லாம் பகவத் ப்ராவண்யத்தை ஊட்டின மஹாநுபாவரென்கை.

5 எனக்குற்ற செல்வமிராமாநுசன்:— ஆளவந்தார் ×மாதாபிதா யுவதய: ஸர்வம் யதேவ நியமேந× என்று ஆழ்வார் திருவடிகளையே ஸ்வரூபப்ராப்தமான ஸகல ஸம்பத்துக்களுமாகக் கொண்டிருந்ததுபோல ஸ்ரீவைஷ்ணவ வுலகமெல்லாம் எம்பெருமானராகிய தம்மையே ஸ்வரூபாநுரூபமான ஸகல ஸம்பத்துமாகக் கொள்ளலாம்படி நிற்பவர் ஸ்வாமி.



6 ஈன்கவிகளன்பால் மயல் கொண்டு வாழ்த்துமிராமாநுசன்:— ×இன்கவிபாடும் பரமகவிகளான சில மஹான்கள்(ஆழ்வான், ஆண்டாள் எம்பார், பிள்ளான்போல்வார்) சொல்லின்பமும் பொருளின்பமும் நன்கு பொருந்துமாறு கவிதைகளை யமைத்து வாழ்த்தும்படியாக வுள்ளவர் ஸ்வாமி.

7 பழியைக் கடத்துமிராமாநுசன்:— இராமாநுசனென்று உள்ளத்தில் அநுஸந்தித்தவாறே ×போயபிழையும் புகுதருவான் நின்றனவும் தீயினில் தூசாகும்×என்னுமாபோலே ஸகல பாபங்களும் தொலையும்படியாக உள்ளவர் ஸ்வாமி.

8 பொய்கைப்பிரான் எரித்த திருவிளக்கைத் தன் திருவுள்ளத்தே யிருத்து மிராமாநுசன்:— அஞ்ஞானவிருளை அறவே அகற்றுவதற்காகப் பொய்கையாழ்வார் ×வையம் தகளியா வார்கடலே நெய்யாக வெய்ய கதிரோன் விளக்காக×என்று தொடங்கி ஏற்றிவைத்த திருவந்தாதி திவ்யப்ரபந்த மென்னும் திருவிளக்கைத் தமது திருவுள்ளத்தினுள்ளே ஒருபோதும் அணையாதபடி ஸ்தாபித்தருளினவர் ஸ்வாமி; முதல் திருவந்தாதியை அநுஸந்தித்து ஞானவிளக்கம் கொண்டவர் என்கை.

9 ஞானமென்னும் நிறைவிளக்கேற்றிய பூதத் திருவடிதாள்கள் நெஞ்சத்துறைய வைத்தாளுமிராமாநுசன்:— நன்புருகி ஞானச்சுடர் விளக்கேற்றினேன் நாரணற்கு× என்று தொடங்கி இரண்டாந்திருவந்தாதியாகிற ஞானச்சுடர் விளக்கையேற்றிய பூதத்தாழ்வாருடைய திருவடிகளைச் சிந்தை செய்பவர் ஸ்வாமி. பூதத்திருவடி என்ற விடத்தில் திருவடி என்றது ஸ்வாமி என்னும் பொருளுடையது. அடிகள் என்னுமாபோலே. இப்பாசுரத்தில் இராமாநுசன் புகழோதும் நல்லோர் மறையினைக்காத்து இந்த மண்ணகத்தே மன்னவைப்பவரே× என்று அருளிச்செய்ததனல் ஸ்ரீமத் வேதமார்க்க ப்ரதிஷ்டாபநாசார்யரென்னும் விருது இராமாநுசனடியார்க்கே ஏற்கும் என்றதாயிற்று.

10 தமிழ்த் தலைவன் பொன்னடி போற்று மிராமாநுசன்.— ×கோவலுள் மாமலராள் தன்னெடு மாயனைக் கண்டமை காட்டும் தமிழ்த் தலைவன்× என்கையாலே ×திருக் கண்டேன் பொன்மேனி கண்டேன்×

என்று தொடங்கியருளின பேயாழ்வாரே இங்குத் தமிழ்த் தலைவராகக் கருதப்பட்டார். அவ்வாழ்வாருடைய திருவடிகளைத் துதிக்குமவர் ஸ்வாமி என்கை.

11 பாண்பெருமாள் சரணம் பதுமத்தாரியல் சென்னி யிராமாநுசன்:— நால் வேதங்களிலே பொதிந்து கிடக்கும் நற்பொருள்களையெல்லாம் அமலனாதிபிரானில் சுருக்கியருளிச்செய்த திருப்பாணாழ்வாருடைய சரணாரவிந்தங்களாலே அலங்கரிக்கப்பட்ட திருமுடியை யுடையவர் ஸ்வாமி.

12 மழிசைக்கிறைவன் இணையடிப்போது அடங்குமிதயத்திராமாநுசன்:— திருமழிசைப்பிரானுடைய பாதாரவிந்தங்கள் அடங்கியிருக்கப் பெற்ற திருவுள்ளமுடையவர் ஸ்வாமி.

13 துளப மாலையும் தமிழ்மாலையும் அரங்கத்தையன் கழற்கணியும் பரன் தாளன்றி ஆதரியா மெய்யனிராமாநுசன்:— ×துளபத் தொண்டாய தொல்சீர்த் தொண்டரடிப் பொடி× என்றும் ×தொடையொத்த துளபமும்கூடையும் பொலிந்து தோன்றிய தோள் தொண்டரடிப்பொடி× யென்றும் தாமே யருளிச் செய்ததற்குப் பொருந்தத் திருத்துழாய் மாலைகளையும் திருமாலை திருப்பள்ளியெழுச்சியாகிற சொல்மாலைகளையும் ஸ்ரீ ரங்கநாதன் திருவடிகளிலே ஸமர்ப்பித்த தொண்டரடிப்பொடியாழ்வாருடைய திருவடிகளையன்றி மற்று எதையும் விரும்பாத ஸத்யசீலர் ஸ்வாமி,

14 கொல்லிகாவலன் சொல்பதிக்கும் கலைக்கவிபாடும் பெரியவர் பாதங்களே துதிக்கும் பரமன் இராமாநுசன்:— குலசேகராழ்வாருடைய திவ்ய ஸூக்திகளில் ப்ரவணர்களான பெரியார் பக்கலில் அன்பு பூண்டவர் ஸ்வாமி,

15 ×தொல்லைமாலை யொன்றும் பாராதவனைப் பல்லாண்டென்று காப்பிடும் பான்மையன் தாள் பேராத வுள்ளத்திராமாநுசன்:— அகிலஹேய ப்ரத்யநீக கல்யாணைகதாநனான எம்பெருமானுக்கு மங்களாசாஸனம் செய்வதையே நியதஸ்வபாவமாக உடையரான பெரியாழ்வாருடைய திருவடிகள் விட்டகலாத திருவுள்ளத்தை யுடையவர் ஸ்வாமி



16 சூடிக்கொடுத்தவள் தொல்லருளால் வாழ்கின்ற வள்ளல் இராமாநுசன்:— சூடிக்கொடுத்த நாச்சியாருடைய பரம க்ருபைக்குப் பாத்ரபூதராகி வாழ்கின்ற பரமோதாரர் ஸ்வாமி. (நூறு தடா நிறைந்த அக்காரவடிசில் ஸமர்ப்பித்ததனால்)

17 தண்டமிழ் செய்த நீலன் தனக்கு உலகிலினியான் எங்கள் இராமாநுசன்:— பல திருப்பதிகளிலும் புக்குக் கவிபாடின நீலனென்னும் திருநாமத்தையுடைய திருமங்கையாழ்வார் பக்கலில் பேரன்பு வாய்ந்தவர் ஸ்வாமி.

18 சடகோபனைச் சிந்தையுள்ளே பெய்தற்கிசையும் பெரியவர் சீரையுதவுமிராமாநுசன்: நம்மாழ்வாரைத் தமது இதயத்தினுள்ளே தியானிப்பவரான மதுரகவிகளின் ஆசார்ய நிஷ்டையாகிற மஹா குணத்தை எடுத்துரைக்க வல்லவர் ஸ்வாமி. (மதுரகவிகள் 'பெரியவர்' என்ற சொல்லால் இங்குக் குறிக்கப்பட்டார்)

19 உறுபெருஞ் செல்வம் முதலியன வெல்லாம் மாறன் செந்தமிழாரணமே யென்று அறிதர நின்ற இராமாநுசன்:— மஹாஸம்பத்தும் மாதாபிதாக்களும் ஸதாசார்யனும் ஸர்வேச்வரனுமாகிற எல்லாரும் ஆழ்வார் அருளிய செந்தமிழ்வேதமாகிய திருவாய்மொழியே தமக்கு என்று யாவரும் அறியும்படி நின்றவர் ஸ்வாமி.

20 சீலங்கொள் நாதமுனியை நெஞ்சால் வாரிப்பருகும் இராமாநுசன்:— மஹா குணசாலிகளான ஸ்ரீமந் நாதமுனிகளைப் பரிபூர்ணாநுபவம் செய்பவர் ஸ்வாமி.

21 எதிகட்கிறைவன் யமுனைத் துறைவன் இணையடியாம் கதி பெற்றுடைய விராமாநுசன்:— உத்தமாச்ரமிகளுள் உத்தமரான ஆளவந்தாருடைய உபயபாதாரவிந்தங்களாகிற பரமப்ராப்யத்தைப்பெற்று விளங்குபவர் ஸ்வாமி.

22 வாணன் பிழை பொறுத்த தீர்த்தனையேத்து மிராமாநுசன்:— பாணாஸுர யுத்தத்திலே அவனுடைய அபராதங்களை க்ஷமித்தருளின பரமபாவனனான கண்ணபிரானைத் துதிப்பவர் ஸ்வாமி.

23 'எம்பெருமானுர்தாம் நமக்கு ஆபத்ரக்ஷகமான அக்ஷயதனம்' என்றுகொண்டு பரமபக்தர்கள் எப்போதும் சிந்திக்கவுரியவர் ஸ்வாமி.

24 பொய்த்தவம் போற்றும் புலைச்சமயங்கள் நிலத்தவியக் கைத்த மெய்ஞ்ஞானத்திராமாநுசன்:— கபடமான அநுஷ்டானங்களை நடத்திப் போருகிற நீச மதஸ்தர்கள் இந்நிலவுலகத்தில் வேரற்றொழியும் படி நிரஸித்தருளின யதார்த்தஜ்ஞாநநிதியானவர் ஸ்வாமி.

25 காரேய் கருணை யிராமாநுசன்:— மேகத்தை யொத்த கருணையை யுடையவர் ஸ்வாமி. [ஜலஸ்தலவிபாகம் பாராமல் ஸர்வத்ர ஸமமாக வர்ஷித்தல், கைம்மாறு கருதாமை முதலிய அனேக அம்சங்களில் ஸ்வாமிக்கு மேகத்தோடு ஸாம்யம் காண்க]

26 திக்குற்ற கீர்த்தி யிராமாநுசன்;— திசைகள் தோறும் விரிந்த பெருங்கீர்த்தி பொருந்தியவர் ஸ்வாமி.

27 கொள்ளக் குறைவற்றிலங்கிக் கொழுந்துவிட்டோங்கிய வள்ளல்தனம் மிக்க விராமாநுசன்:— கொள்ளக் கொள்ளக் குறையாமல் தானே விளங்கி மேன்மேலும் இளகிப் பதித்து வளர்ந்து வருமதான குணமுடையவர் ஸ்வாமி.

28 பின்னைதன் காதலன்தன் பாதம் நண்ணு வஞ்சர்க்கரிய விராமாநுசன்:— நப்பின்னைப் பிராட்டிக்கு வல்லபனுன கண்ணபிரானுடைய திருவடிகளில் அன்பில்லாத ஆத்மாபஹாரக் கள்வர்களுக்குக் கிட்டுதற்கு அரியரானவர் ஸ்வாமி.

29 தென் குருகைப்பிரான் பாட்டைத் தன் பத்தியென்னும் வீட்டின்கண் வைத்த விராமாநுசன்:— நம்மாழ்வாருடைய திருவாய்மொழியைத்தம்முடைய பக்தியாகிற திருமாளிகையிலே ஸ்தாபித்தருளியவர் ஸ்வாமி.

30 மன் பல்லுயிர்கட்கிறைவன் மாயனெனமொழிந்த அன்பனனகனிராமாநுசன்:— ஸகல ஜீவராசிகளுக்கும் சேஷியாயிருப்பவன் ஸ்ரீமந் நாராயணனெனுவனேயென்று ஸ்ரீபாஷ்யாதி முகத்தாலே அருளிச் செய்த பரமகாருணிகர் அகில ஹேய ப்ரத்யநீகரான ஸ்வாமி.



31 தென்னத்தியூர் கழலிணைக்கீழ்ப்பூண்ட வன்பாளனிராமாநுசன்:— ஸ்ரீ ஹஸ்திசைல சிகரோஜ்ஜ்வல பாரிஜாதமான பேரருளாளப் பெருமாளுடைய திருவடிகளில் அன்புபூண்டவர் ஸ்வாமி.

32 செறுகலியால் வருந்திய ஞாலத்தை வண்மையினல் வந்தெடுத்தளித்த வருந்தவனெங்களிராமாநுசன்:—தருமநெறிக்கு த்ரோஹியான கலிபுருஷனுடைய சேஷ்டைகளாலே வருந்திய பூமியைத் தமது நிர்ஹேதுக க்ருபையினல் ரக்ஷித்தருளினவர் ஸ்வாமி.

33 ஆழியும் நாந்தகமும் தண்டும் வில்லும் சங்கமுமான விராமாநுசன்:—பஞ்சாயுதாழ்வார்களின் அம்சமாகத் திருவவதரித்தவர் ஸ்வாமி. (இப் பாசுரத்தை நோக்கியே யதிராஜ ஸப்ததியில் *அப்ருதக் ப்ரதிபந்நயந்மயத்வைர் வவ்ருதே பஞ்சபிராயுதைர் முராரே:* என்கிற ச்லோகம் அவதரித்தது.

34 நெனபுலத்தில் பொறித்தவப் புத்தகச்சும்மை பொறுக்கி நலத்தைப் பொறுத்த நயப்புகழுற்ற இராமாநுசன்:— ஸம்ஸாரிகள் செய்யும் பாவங்களைக் குறித்து யமலோகத்தில் சித்ரகுப்தன் எழுதி வைத்த சுருணைகளைக் கொளுத்திவிட்டு, அதனுல் மிக விளங்கப்பெற்ற புகழுடையவர் ஸ்வாமி. ஆச்ரிதஜந ஸர்வபாபப்ரணசகரென்கை,

35 பொன்னரங்க மென்னில் மயலே பெருகு மிராமாநுசன்:— 'திருவரங்கம் பெரியகோயில்' என்றவாறே வியாமோகம் பெருகி நிற்பவர் ஸ்வாமி.

36 ஆரணச்சொல்லொண் பொருள் கொண்டு காசினியோர் பின் படருங் குணனெம்மிராமாநுசன்:— வேதங்களிலுள்ள சிறந்த அர்த்தங்களைக்கொண்டு ஸம்ஸாரிகளைப் பின் தொடரும் சீலகுண முடையவர் ஸ்வாமி. வேதார்த்தங்களைக்கொண்டு ஸம்ஸாரிகளைத் திருத்துபவரென்கை.

37 இராமாயணமென்னும் பத்தி வெள்ளங் குடிகொண்ட கோயிலிராமாநுசன்:— ஸ்ரீராமாயண மென்கிற பக்தி ஸமுத்ரம் நித்ய வாஸம் செய்யப்பெற்ற திவ்யஸ்தானமானவர் ஸ்வாமி. (ஸ்ரீராமா

யணத்திற்கு பக்தி ஸமுத்ரமென்று பெயரிடப்பட்டிருப்பது குறிக்கொள்ளத் தக்கது)

38 புண்ணியர்தம் வாக்கில் பிரியாவிராமாநுசன்:— தம்மை இடைவிடாது அநுபவிக்கும் பாக்கியசாலிகளினுடைய வாக்கை விட்டுப் பிரியாதவர் ஸ்வாமி. [பக்தர்களினுல் அநவரதம் துதிக்கப்படுமவரென்கை.]

39 தெருள் தந்து சேமங்கள் செய்யும் இராமாநுசன்:— நமக்கு யதார்த்த ஜ்ஞானத்தை யளித்து க்ஷேமங்களைச் செய்ய வல்லவர் ஸ்வாமி.

40 கண்ணனுக்கே யாமது காமம் அறம்பொருள் வீடிதற்கென்றுரைத்த விராமாநுசன்:-தர்மார்த்த காமமோக்ஷங்களாகிற நால்வகைப் புருஷார்த்தங்களுக்குள் பகவத் விஷயமானதே காமமென்பது. மற்ற மூன்றும் இந்த காம புருஷார்த்தத்துக்கு சேஷபூதங்கள் என்று உபந்யஸித்தருளினவர் ஸ்வாமி.

41 அண்ணலிராமாநுசன்:— ஸர்வ ஸ்வாமி என்ன நிற்பவர் ஸ்வாமி. [எம்பெருமான் மநுஷ்யாதிகளான பல யோனிகளிலும் அவதரித்துக் கண்காண நிற்கச் செய்தேயும் அவனைக் காணமாட்டாதிருந்த உலகர்களெல்லாரும் எம்பெருமானுருபதேசங்கொண்டே அவனைக் காணப்பெற்றதனுல் இவரே ஸர்வஸ்வாமி என்கை.]

42 தூயவன் தீதிலிராமாநுசன்:— பரம பரிசுத்தரும் அகில ஹேயப்ரத்யநீகருமானவர் ஸ்வாமி

43 அறஞ்சீறுமுறுகலியைத் துரக்கும் பெருமை யிராமாநுசன்:- தருமமார்க்கத்திற்கு த்ரோஹியான கலிபுருஷனை ஓட்டிவிடும்படியான பெருமை வாய்ந்தவர், (இப்பாசுரத்தையடியொற்றியே 'ராமாநுஜ முநிர் ஜீயாத் யோ ஹரேர் பக்தியந்த்ரிதாத், கலி கோலாஹல க்ரீடா முதாக்ரஹ மபாஹரத்' என்று பட்டர் அருளிச் செய்தது).

தொடரும்.........

ரிஜிஸ்டர் நெ. 2975

ஸ்ரீ ராமாநுஜன்

**P. B. அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளின் நூல்துறைகள்**

1 நாலாயிர திவ்யப்ரபந்த வுரைகள்
2 பூர்வாசார்ய தமிழ்ப்பிரபந்த ,,
3 ஸகல பூர்வாசார்ய ஸ்தோத்ர ,,
4 ஆழ்வாராசார்யப்பிரபாவ நூல்கள்
5 இதிஹாஸபுராணசரித்திர ,,
6 ரஹஸ்யார்த்த விளக்க ,,
7 வேதாந்தப் பொருள் விளக்க ,,
8 ஸ்த்ஸம்ப்ரதாயார்த்த விளக்க ,,
9 வேதவிசாரலக்ஷண நூல்கள்
10 லோகாபிராம உபந்யாஸ ,,
11 பரபக்ஷப்ரதிக்ஷேப ,,
12 உபந்யாஸக ஸௌபாக்ய ,,
13 வடமொழி நூல்திரள்கள்
14 ஹிந்தீ பாஷையில் ,,
15 தெலுங்கு பாஷையில் ,,
16 பூர்வாசார்ய க்ரந்த வெளியீடுகள்

விரிவான கியாடலாகுகள் தருவித்து விவரங்காண்க

சந்தாப்பணம் M. O. செய்பவர்கள்:

P. B. ANNANGARACHARYA,
Editor, Granthamala, Kancheepuram-631503
என்ற விலாசத்திற்கு அனுப்புக

If un-delivered please return to:

**P. B ANNANGARACHARYA**
Kancheepuram Pin Code 631503

To
Sriman V. Ethirajan. B.A.,
Head Master.
Mathavasa Islamia
High School
ERODE
638001

*Edited and Publised by P.B. Annangaracharya Swamy and Printed by E. Devarajan at Sri Kamakshi Press 44-c. Thirukatchinambi Street, Kanchipuram-631503*